9th November 1961]

DEPUTY SPEAKER : A similar question put by hon. Member Sri V. K. Ramaswamy Mudaliyar has already been answered by the Hon. Minister.

**Sri V. K. KOTHANDARAMAN :** விநியோகத்தில் ஏற்படக் கூடிய ஊழலின் காரணமாகத்தான் ஏற்கனவே சல்பேட் போன்ற உரங்களைக்கூடத் தனியாரிடத்தில் இருந்து எடுத்து கூட்டுறவுகளுக்கும், பஞ்சாயத்து போர்டுகளுக்கும் கொடுத்திருக் கிறோம். அப்படியே இந்தச் சிமெண்டு விநியோகத்தையும்கூடத் தனியாரிடத்தில் இருந்து எடுத்து கூட்டுறவு சங்கங்கள் மூலமாக விநியோகம் செய்ய ஏற்பாடு செய்யப்படுமா ?

**The Hon. Sri P. KAKKAN :** அரசாங்கம் நன்கு பரிசீலனை செய்துதான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறது. கூட்டுறவு சொஸைடிகளிடத்திலோ, பஞ்சாயத்து போர்டுகளிடத்திலோ கொடுக்கிற தகவல் என்னிடத்தில் இல்லை.

**Sri R. SRINIVASA IYER :** இப்போது 20 சதவிகிதம் என்று தனியார் டெப்போக்களுக்குக் கொடுக்கிற முறையில் இன்றைக்கு மூட்டை 12 ரூபாய் 15 ரூபாய் என்று விற்கக்கூடிய நிலைமை இருக்கிறது. ஆகவே, இப்படி கள்ளமார்க்கெட் ஆகாமல் தடுக்க ஒரு ஊருக்கே இரண்டு மூன்று ஏஜெண்டுகளுக்கு லைசென்சு கொடுக்க முயற்சி எடுக்கப்படுமா ?

**The Hon. Sri P. KAKKAN :** இதுபற்றித் தனியாகக் கேள்வி போட்டால் பரிசீலனை செய்யப்படும்.

*Sweepers and scavengers*

* 1917 Q.—Sri V. K. KOTHANDARAMAN (on behalf of **Sri M. KALYANASUNDARAM**) : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) that details of Centrally-sponsored schemes to be implemented during the current year for improving the working conditions of sweepers and scavengers; and

(*b*) the list of municipalities to be benefited?

The Hon. Sri P. KAKKAN : (*a*) & (*b*) A paper[a] is placed on the table of the House.

***Highways and Rural Works Department***

* 1918 Q.—Sri V. K. KOTHANDARAMAN : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

வேதாரண்யத்தில் மராமத்து இலாகா (**Highways**)-ல் மேஸ்திரி **or Attender**-ஆக வேலை செய்யும் ஒருவர் சென்ற 6 வருட காலமாக வேலை செய்யாமலேயே சம்பளம் வாங்கி வருவது உண்மையா ?

The Hon. Sri P. KAKKAN : No, Sir.

---

a Printed as Appendix I on page 107 infra.

[9th November 1961

SRI V. K. KOTHANDARAMAN : சார், இதுபோன்று ஆறு வருஷ காலமாக ஒரு வேலையும் செய்யாமல் சம்பளம் வாங்கி வருகிறேன் என்றும், அதற்குக் காரணத்தை விசாரணை செய்தால் நேரில் சொல்வதற்குத் தயாராய் இருக்கிறேன் என்றுகூட சர்க்காருக்கு அவர் கடிதம் எழுதியிருக்கிறார். அதன் பேரில் இனிமேலாவது பரிசீலனை செய்வதற்கு அரசாங்கம் தயாரா?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினருடைய கேள்வியை நான் உணர்வேன். அந்த ஆள் ரொம்ப மோசமான பேர்வழி. பொறுப்பான வேலை எதுவும் அவனுக்குக் கொடுக்கக் கூடாது என்றே வைத்திருந்தது. எனக்கு வேலை கொடுப்பது இல்லையென்று அவன் சொல்லிக் கொண்டிருந்தான். இப்போது அவனை சஸ்பெண்டு பண்ணி வைத்திருக்கிறது. இதைப்பற்றி பரிசீலனை செய்யப்பட்டும் வருகிறது.

SRI V. K. KOTHANDARAMAN : அந்த ஆள் ரொம்ப மோசமானவன் என்று அதிகாரிகள் சொன்னதை வைத்துக் கொண்டு கனம் அமைச்சர் அவர்கள் சொல்லக்கூடாது. இவனுக்கு மேலதிகாரியாக இருக்கக்கூடியவரிடத்தில் காணப்படும் ஊழல்களை இவன் கண்டுகொள்வதனாலேயே இவனை அவர்கள் 'கண்டெம்' செய்திருக்கிறார்கள் என்பது பரிசீலனை செய்யப் பட்டதா?

THE HON. SRI P. KAKKAN : மேலதிகாரிகள் சொன்னார்கள் என்று சொல்லவில்லை. முன்பு தஞ்சாவூர் டிவிஷனில் இருந்தான். அங்கே கெட்ட பெயர் வாங்கிக்கொண்டதால் நாகப்பட்டிணத்திற்கு மாற்றப்பட்டான். இங்கும் கெட்ட பெயர் வாங்கிக் கொண்டால்தான் இவனைப்பற்றி மோசமான ஆள் என்று அரசாங்கம் முடிவுக்கு வரவேண்டியதாக இருந்தது.

* 1919 *Q.*—SRI N. MARUDACHALAM : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

ஹைவேஸ் டிபார்ட்மெண்டில் தினக்கூலிகளாக வேலை செய்து வரும் தொழிலாளிகளை நிரந்தரமாக்க சர்க்காருக்கு உத்தேசமுண்டா?

THE HON. SRI P. KAKKAN : Yes, Sir.

SRI N. MARUDACHALAM : சார், இந்தக் கோவை ஜில்லாவில் சாலை மராமத்து இலாகாவில் மட்டும் 150 ஆண்களும், பெண்களும் இருக்கிறார்கள். பத்து வருஷ காலமாக வேலை நிரந்தரமாக்கப்படாமல் கூலிகளாகவே வேலை செய்துகொண்டிருக்கிறார்கள். அவர்களை நிரந்தரப் பணியாளர்களாக மாற்றுவதற்குச் சர்க்கார் உத்தரவு போடுமா?

THE HON. SRI P. KAKKAN : இவ்விஷயம் பரிசீலனை செய்யப் பட்டது. பே கமிஷன் சிபார்சுப்படி 5 வருஷங்களுக்கு மேலாகத் தொடர்ந்து இருக்கிறவர்கள் காயம் செய்யப்படலாம் என்று சர்க்காரும் ஒத்துக்கொண்டிருக்கிறது. இதுபற்றி பின்னாலே நல்ல தொரு முடிவு ஏற்படும்.